21st March 1961]

*Cases of change of sex*

* 971 *Q.*—SRI A. VEDARATHNAM (on behalf of SRI A. A. RASHEED) : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether any cases of change of sex have been registered in any of the Government Hospitals in the State in 1959–60?

THE HON. SRI M. A. MANICKAVELU : One case of change of sex was brought to the out-patient Department of the Government Hospital, Karur (Tiruchirappalli district) during September 1960.

SRI A. VEDARATHNAM : தயவுசெய்து இதனுடைய விவரத்தை விளக்க முடியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்பொழுது இந்த விவரங்களையெல்லாம் சொல்லுவது அவ்வளவு உசிதமாகத் தோன்றவில்லை. கனம் அங்கத்தினர் அவர்கள் என்னிடம் வந்தால் அதைப்பற்றி நான் அவர்களுக்குச் சொல்லுகிறேன். (சிரிப்பு.)

SRI V. K. KOTHANDARAMAN : ஆணும் பெண்ணும் இல்லாத அலிகளை பெண் வார்டில் அனுமதிக்கப்பட்ட கேஸ்கள் எங்கெங்கே என்பதை அறிய முடியுமா ? அதுபற்றி சர்க்காருக்கு புகார் வந்திருக்கிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த சமாசாரம் ஆண் பெண்ணாக மாறுவது அல்லது பெண் ஆணாக மாறுவது பற்றிய விசித்திரம்.

*Misappropriation (Bodinaickkanur Cardamom Co-operative Society)*

* 972 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லா போடிநாய்க்கனூர் ஏலக்காய் கூட்டுறவு சங்கத்தில் மோசடிகள் நடந்ததாக புகார் வந்ததா ?

(இ) அது சம்பந்தமாக போலீஸ் புலன் விசாரணை என்னவாயிற்று?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) No, Sir.

(இ) Does not arise.

SRI N. R. THIAGARAJAN : ஏலக்காய் கூட்டுறவு சங்கத்திலிருந்து ரூ. 10 லட்சத்திற்கு மேல் விற்பனை வரி மட்டும் மோசடி நடந்துள்ளதாக திட்டவட்டமாக கேள்விப்படுகிறேன். அதாவது உண்மையா ?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் அந்த விதமான புகார் பற்றிய எல்லா விவரங்களையும் எழுதி அனுப்பினால், சர்க்கார் அதைப் பரிசீலனை செய்யும்.

*Malaria (eradication)*

* 973 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) அமெரிக்க சர்க்கார் இந்திய சர்க்காருக்கு மலேரியா ஒழிப்பிற்காக கொடுத்த ரூ. 49 கோடியில் நம் மாநிலத்திற்குக் கிடைத்த தொகை எவ்வளவு ?

(இ) அத்தொகை மூலம் என்னென்ன திட்டங்கள் மேற்கொள்ளப் பட்டிருக்கின்றன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) Rs. 94,32,809.

(இ) A statement[a] is placed on the table of the House.

---

[a] Printed as Appendix III on pages 275–276 infra.

[21st March 1961

**Sri A. VEDARATHNAM :** இந்த மலேரியா வியாதி கொசுவினால் பரவுகிறது—எப்படி காலரா தண்ணீரால் பரவுகிறதோ அதே போன்று. அப்படியிருக்கிற மலேரியா எராடிகேஷன் ஸ்கீமில் இங்கே மேஜை மீது வைக்கப்பட்டிருக்கிற அறிக்கையில் கொசுவை ஒழிப்பதற்குத் திட்டம் கிடையாது என்று கூறப்பட்டிருக்கிறதே. கொசுவை ஒழிக்காமல் எப்படி மலேரியாவை ஒழிக்க முடியும் என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. A. MANICKAVELU :** இந்தக் கொசுக்களில் பல விதம் இருக்கின்றன. மலேரியா கொசு வேறு. அதுதான் மலேரியாவை உண்டாக்குகிறது. மக்களைக் கடித்துத் தொந்தரவு செய்கிற கொசு வேறு. இப்பொழுது "கான்சென்டிரேட்" செய்து கவனம் செலுத்துவது "மலேரியா பேரிங் மஸ்கிடோஸ்" பேரில்தான். அதற்கெல்லாம் தான் அப்படி சொல்லியிருக்கிறோம்.

**Sri S. M. ANNAMALAI :** இந்த "டி.டி.டி." அடித்த பிறகு கொசு அதிகமாகிவிட்டது. மூட்டைப்பூச்சியும் அதிகமாகிவிட்டது. அதைத் தடுப்பதற்கு என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது? மலேரியா வருவதற்குப் பதிலாக இந்த நோய் அதிகப்படியாக ஆகிவிட்டது. அதைத் தடுப்பதற்கு சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள்.?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** இம்மாதிரி சம்பவம் ஏற்பட்டிருக்கிறது. முன்பு கும்பகோணத்தில் கொசுவை ஒழிக்கும்போது, ஈ அதிகமாகிவிட்டது. பிறகு ஈயை ஒழிப்பதற்கு வேறு பிரயத்தனம் செய்யவேண்டியிருந்தது.

**Sri M. K. SOMASUNDARAM :** இந்தத் திட்டம் கிராமங்களில்தான் அதிகமாக அனுசரிக்கப்படுகிறது. முனிசிபாலிடிகளில் இந்தத் திட்டம் அனுசரிக்கப்படாத காரணத்தினால் அங்கு கொசு அதிகமாக இருக்கிறது. ஆகவே, முனிசிபாலிடிகளுக்கும் இந்தத் திட்டத்தை விஸ்தரிப்பதற்கு அரசாங்கம் முன் வருமா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** இந்தத் திட்டம் பிராந்தியம் பூராவுக்கும் உண்டு. ஆனால் மலேரியா "எபிடெமிக்" எங்கெங்கே அதிகமாக இருக்கிறதோ அங்கே கொஞ்சம் தீவிரமாக இருக்கும். எல்லா இடங்களிலும் இதை ஒழித்துக் கட்டவேண்டுமென்று தான் எல்லா இடங்களுக்கும் சோதித்துத் திட்டம் போடப்பட்டிருக்கிறது. ஒரு பெரிய திட்டம் போடப்பட்டு அதற்கு ஏராளமான பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. தமிழ் நாடு அரசாங்கமும் செலவு செய்கிறது. மத்திய அரசாங்கமும் அதற்குப் பணம் செலவு செய்கிறது.

**Sri K. SATTANATHA KARAYALAR :** இந்தக் கொசு ஒழிப்புத் திட்டத்தின் அடிப்படையே எல்லா இடங்களிலும ஒன்று போல கொசுக்களை ஒழித்து விடவேண்டும் என்பதுதான் என்று தெரிகிறது. கொசு ஒழித்த இடங்களிலே புதிதாக பல கொசுக்கள் வருவதன் காரணமாக, இந்தக் கொசுக்களுக்கெல்லாம் இப்பொழுது அடிக்கக்கூடிய டி.டி.டி-க்கு "இம்யூனிடி" வந்து விடாதா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** "இம்யூனிடி" வந்து விடும் என்று தான் அவசரம் அவசரமாகச் செய்யப்படுகிறது. ரொம்ப நாட்கள் ஆனால், இம்யூனிடி வந்து விடும் என்று தான் பெரிய அளவிலே திட்டம் போட்டு சீக்கிரம் சில வருஷங்களுக்குள்ளேயே அதை முடிக்கவேண்டுமென்று இந்தியா பூராவுக்கும் இந்தத் திட்டம் போடப்பட்டிருக்கிறது.

**Sri A. VEDARATHNAM :** மேஜை மீது வைக்கப்பட்டிருக்கிற அறிக்கையில் 'It may be mentioned that the National Malaria Eradication Programme does not contemplate any project for eradication of mosquito population' என்றுதான் கூறியிருக்கிறதே அல்லாமல், அந்த மலேரியா கொசுவை ஒழிக்கப்போவதாகக்கூட அதில்காணப்படவில்லை. அப்படியிருக்கும்

21st March 1961]

பொழுது கனம் அமைச்சர் அவர்கள் மலேரியா கொசுவைத்தான் ஒழிக்கிறார்கள், மற்ற கொசுவை ஒழிப்பதில்லை என்று குறிப்பிட்டார்கள். அதன் விவரம் என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : Though the statement may read like that, the inference is that the concentration is to eradicate the malaria bearing mosquitos and not other kinds of mosquitos by technical name.

SRI T. KARIA GOUNDER : கொசுக் கடியினால் மலேரியா வருவதாக முடிவு இருக்கும்பொழுது, கொசுவை நீக்கும்பொழுது மூட்டைப் பூச்சி வந்திருப்பதால், அதனுடைய உபத்திரவத்தால் ஏதாவது வியாதி உண்டாகிறதா என்று சர்க்கார் பரிசீலனை செய்தார்களா ? அப்படியிருந்தால் அதன் விவரத்தை அறிவிக்க முடியுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : அதனால் வியாதி ஒன்றும் இல்லை. அசௌகரியம்தான். அந்த அசௌகரியத்தினால் தான் அதைப் பற்றி இங்கே கேள்வி எழுப்பக் கூடிய நிலைமை ஏற்பட்டது.

SRI S. NAGARAJA MONIGAR : இந்த "டி. டி. டி" அடித்தால் அழிந்து, ஒழிந்து போகாமல் அதிகமாக உற்பத்தி ஆவதற்கு கொசுக்கள் முன் வருமானால், அவைகள் இந்திய வை-பாரதத்தை மதிக்காமல், இந்திய அரசியல் சட்டத்திற்கு உட்படமாட்டேன் என்று சொல்கிற கொசுக்களா ?

(பதில் இல்லை.)

### *Nurses and midwives (Relief)*

*974 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நமது ராஜ்யத்திலுள்ள ஆஸ்பத்திரிகளில் வேலை செய்யும் நர்ஸ்கள், மிட்வைப்புகள் அடிக்கடி காயலாவாகி விடுகிறார்கள் என்பது உண்மையா ?

(இ) இதற்குக் காரணமென்ன ?

(உ) அதற்கான பரிகாரம் காண சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : ( No, Sir,

(இ) Does not arise.

(உ) Periodical medical check up is being done in every 6 months.

SRI V. K. KOTHANDARAMAN : நமது ஆஸ்பத்திரிகளில் நர்சுகள் மிகவும் குறைவாக இருப்பதன் காரணமாகவும், அவர்களுக்கு இருக்கிற வேலைப் பளுவின் காரணமாகவும், மாதத்தில் ஒன்றிரண்டு நாட்கள் தான் விடுமுறை கிடைக்கிறது என்ற காரணமாகவும் அவர்கள் அடிக்கடி நோயால் பாதிக்கப் படுகிறார்கள் என்பது கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா ? ஆகவே, அவர்களுக்கு வாரத்திற்கு ஒரு நாளாவது விடுமுறை கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : Yes, Sir. It is now being done in all the hospitals in the City and in some hospitals in the mufassal also.